உ



# கடவுளும் கோயிலும் சில கேள்விகள்

அவனருள்

வெளியீடு - 44

ஜூன் 1998

வளையும், பறவைகள் கட்டும் கூடுகளும் ஒன்று போலில்லை. மாடுகளுக்காக அமைக்கப்படும் தொழுவமும், குதிரைகளுக்குக் கட்டப்படும் லாயமும், கோழிகளுக்காக உருவாக்கும் கூண்டுகளும் ஒன்று போலில்லை. மனிதர்கள் வாழும் வீடுகளும் ஒன்றுபோலில்லை.

குறிப்பிட்ட நபரின் தேவைக்கேற்ப, வசதிக்கேற்ப, கட்டுமானப் பொருள் கிடைப்பதற்கேற்ப, சுற்றுச் சூழலுக்கு ஏற்ப வீடுகளை (ஒவ்வொன்றையும்) வாயில் நிலை அமைப்பு தொடங்கி, ஜன்னல்கள், அறைகள் என்று எல்லா நிலைகளிலுமே சிறிதாகவும், பெரிதாகவும் நூற்றுக் கணக்கான அடிப்படைகளில் கட்டுகிறோம்.

இதுபோலவே தான், இறைவனுக்கும் தொன்று தொட்டு ஆயிரக்கணக்கான வடிவங்களும், வழிபாடுகளும் வழிபாட்டு இடங்களும் தோன்றியிருக்கின்றன.

இவற்றைப் பட்டியலிட்டு விளக்கும் நூல்களான ஆகமங்களில் குறிப்பிடப்பட்டுள்ள எண்ணிக்கைக்கும் மேலாக இன்னும் பல்வகைப் புதுவடிவங்கள் தோன்றினாலும் ஆச்சரியமில்லை.

## கடவுளுக்குக் கோயில் தேவையா?

*கடவுளுக்குக் கோயில் தேவையில்லை.*

மனிதன், தனக்கு அப்பாற்பட்ட சக்தியிடமிருந்து தான் விரும்பியதையெல்லாம் நினைத்தவுடனேயே பெற்றிட விரும்பாத வரைக்கும் கடவுளுக்கு கண்டிப்பாகக் கோயில் தேவையில்லை.

காற்றில் *ஆவியாகவும்,* ஆறு, கடல்களில் *திரவமாகவும்,* மிகக் குளிர்ந்த பகுதிகளில் *திடப் பொருளாகவும்*

*இருக்கின்ற தண்ணீரை* (அதாவது, எங்கும் உள்ள நீரை) அது இருக்கின்ற நிலையிலேயே, *புல்லுருவிச் செடிகள்* காற்றிலுள்ள ஈரப்பதத்தைப் பயன்படுத்துவது போலவும், *காட்டு மிருகங்கள்* நீர்நிலைகள் இருக்கின்ற இடங்களை நாடிச் சென்று தாகம் தீர்த்துக் கொள்வது போலவும், மனிதனும், தன்னுடைய நீர்த்தேவையைப் பூர்த்தி செய்து கொண்டால், தண்ணீரைத் தேக்கி வைக்கக் குளங்களை வெட்ட வேண்டாம். அணைகளைக் கட்ட வேண்டாம். நீரைக் கடத்திச் செல்லக் கால்வாயோ, குழாயோ தேவையில்லை. நகரத்திற்கும், தெருவிற்கும், வீட்டிற்கும் தொட்டிகள் அவசியமில்லை. அவ்வப்போது நீரை அள்ளிப் பயன்படுத்தக் குவளையோ, வாளியோ தேவையில்லை.

இயற்கை வளத்தை அது இருக்கும் வகையிலேயே, இருக்கின்ற இடத்திலேயே பயன்படுத்தும் நுண்ணறிவு எல்லா உயிர்கட்கும் வாய்த்திருப்பினும், மனிதன் மட்டுமே அத்திறனை, அறிவை, படிப்படியாக இழந்து வந்திருக்கின்றான். இதனால்தான் ஆறறிவு படைத்த மனிதனுக்கு மட்டும், தண்ணீருக்காக அணையும், தொட்டியும், ஆழ்கிணறும், குழாயும் என்று பல்வேறு செயற்கை அமைப்புக்கள் தேவையாகி விட்டன.

எல்லாப் பொருளிலும் உள்ளார்ந்து இருக்கும் பரம்பொருள் சக்தியை உணரும் திறன் ஒவ்வோர் மனிதர்க்கும் வாய்த்திருப்பினும், பெரும்பாலோரும், அவ்வுணர்வு நிலையை இழந்துவிட்டதால் தான் இறைசக்தியை நினைவூட்டுவதற்காக, மனிதர்கள் அதனை உணர்வதற்காக, கோயில்கள் கட்டப்படுவது அவசியமாகியிருக்கிறது.

*கோயில் என்ற கட்டிடம் கடவுளுக்கு அல்ல.* நாம் இறைவனோடு ஒன்றுதற்காக, *நாமே, நமக்காக எழுப்பிக்*